

# நன்னூல்
## நூல் அறிமுகம்

முனைவர் த. டான் ஸ்டோனி
தமிழ்த்துறை
இலயோலா கல்லூரி, சென்னை

# நன்னூல் அறிமுகம்



- அகத்தியர் இயற்றிய ' **பேரகத்தியம்** தமிழில் எழுதப்பெற்ற முதல் இலக்கண நூலாகும் .
- இந்நூல் இப்போது கிடைக்கப்பெறவில்லை .
- இந்நூலுக்கு வழி நூலாகத் தோன்றியது தொல்காப்பியர் இயற்றிய ' **தொல்காப்பியம்** ' எனும் இலக்கண நூலாகும் .
- தொல்காப்பியம் எழுத்து , சொல் , பொருள் - எனும் மூன்றைப் பற்றிய இலக்கணச் செய்திகளை விரிவாகக் கூறுகின்றது .
- இந்நூல் மிகப் பரந்ததாகவும் கடினமானதாகவும் இருப்பதால் , அனைவரும் எளிதாகப் பயில இயலாததாகவுள்ளது .
- எனவே , அதனைத் தொகுத்தும் வகுத்தும் விளக்கியும் **பவணந்தி முனிவர்** ' **நன்னூல்** ' எனும் பெயரில் ஓர் இலக்கண நூலை இயற்றியருளினார் .

# நன்னூல் - கட்டமைப்பு :



- நன்னூல் இயற்றப்பெற்ற காலம் **கி.பி. 13 - ஆம்** நூற்றாண்டின் முற்பகுதியாகும்.
- நன்னூல் , தொல்காப்பியத்திற்கு வழிநூலும் , அகத்தியத்திற்குச் சார்பு நூலுமாகும் .

- **1. பாயிரம் ,**
- **2. எழுத்ததிகாரம் ,**
- **3. சொல்லதிகாரம் -** ஆகிய மூன்று பிரிவுகளைக் கொண்டுள்ளது .

முனைவர் த. டான் ஸ்டோனி

# பாயிரம்



பாயிரம் என்னும் பகுதியில் **சிறப்புப் பாயிரம்** , **பொதுப்பாயிரம்** என்னும் இரண்டு பிரிவுகள் உள்ளன

- நூல் , நூலாசிரியர் பற்றிய வரலாறுகளைக் கூறும் ' **சிறப்புப்பாயிரம்** ' தொடக்கத்திலும் ,
- அதனையடுத்து
- நூல் , நூலாசிரியர் முதலிய ஐவகைக் கூறுகளை விரிவாகக் கூறும் **பொதுப்பாயிரமும்** அமைந்துள்ளன.
- **பொதுப்பாயிரத்தில் 55 நூற்பாக்கள்** உள்ளன .

முனைவர் த. டான் ஸ்டோனி

# எழுத்ததிகாரம் :



- முறையாக நூல் தொடங்குவதே இவ்வதிகாரத்திலிருந்துதான் எனக் கூறலாம் .
- இவ்வதிகாரத்தின் தொடக்கத்தில் அருகதேவனைப் போற்றி வழிபடும் ' கடவுள் வாழ்த்து அமைந்துள்ளது .

1. எழுத்ததிகாரம்5 அதிகாரங்களைக் கொண்டது
2. **எழுத்தியலில்**

- **பதவியலில்**
- **உயிரீற்றுப் புணரியலில்**
- **மெய்யீற்றுப் புணரியலில் ,**
- **உருபு புணரியலில்**



# **எழுத்ததிகாரம்** (தொடர்ச்சி)

- முதலிலுள்ள **எழுத்தியலில்** 72 நூற்பாக்களும்,
- இரண்டாவதாக அமைந் துள்ள **பதவியலில்** 23 நூற்பாக்களும் ,
- மூன்றாவதாக அமைந்துள்ள **உயிரீற்றுப் புணரியலில்** 53 நூற்பாக்களும்
- நான்காவதாக அமைந்துள்ள **மெய்யீற்றுப் புணரியலில்** 36 நூற்பாக்களும் ,
- ஐந்தாவதாக அமைந்துள்ள **உருபு புணரியலில்** 18 நூற்பாக்களும்
- \- ஆக **இவ்வதிகாரத்தில் 202** நூற்பாக்கள் அமைந்துள்ளன .



# சொல்லதிகாரம் :

- இவ்வதிகாரத்தின் தொடக்கத்திலும் **அருகதேவனைப்** போற்றி வணங்கும் ' கடவுள் வாழ்த்து அமைந்துள்ளது . இவ்வதிகாரத்திலும் ஐந்து இயல்கள் அமைந்துள்ளன .
- முதலாவதாக அமைந்துள்ள **பெயரியலில்** 62 நூற்பாக்களும் ,
- இரண்டாவ தாக அமைந்துள்ள **வினையியலில்** 32 நூற்பாக்களும் ,
- மூன்றாவதாக அமைந்துள்ள **பொதுவியலில்** 68 நூற்பாக்களும்
- நான்காவதாக அமைந் துள்ள **இடையியலில்** 22 நூற்பாக்களும்
- ஐந்தாவதாக அமைந்துள்ள **உரியியலில்** 21 நூற்பாக்களும் –
- ஆக , இவ்வதிகாரத்தில் **205** நூற்பாக்கள் அமைந்துள்ளன .
- நன்னூலில் மொத்தம் **55 + 202 + 205 = 462 நூற்பாக்கள்** அமைந்துள்ளன



# உரையாசிரியர்கள்

- நன்னூலுக்கு முதன் முதலாக உரையெழுதியவர் கி.பி. 13 - ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த **மயிலை நாதர்** என்பவராவார்
- அதன் பின்னர் **சங்கர நமச்சிவாயர், சிவஞான முனிவர், இராமானுசக் கவிராயர், விசாகப் பெருமாளையர் , ஆறுமுக நாவலர்** முதலியோர் உரையெழுதி யுள்ளனர் .
- இந்நூலுக்குத் தற்போது நாற்பதுக்கும் மேற்பட்ட உரைகள் உள்ளன எனக் கூறுகின்றனர் .

